மார்க்ஸீயம் தோன்றிய காலமுதல், ஒவ்வொரு சாஸ்திர பூர்வமான சமுதாயத்திலும்
ஏற்பட்டது போலவே மீண்டும் ஒருமுறை அது (மார்க்ஸீயம்) தன்னுடைய அளவற்ற
பு வீரியத்தையும், தன்னுடைய ஆக்கபூர்வமான தன்மையையும், மனித சமூக வி
டுதலைப் போராட்டத்தில் தொழிலாளி வர்க்கத்திற்குப் பழுதற்ற வழிகாட்டியாகச் செயல்படுவதற்
குத் தனக்குள்ள திறமையையும் வெளிப்படுத்தியுள்ளது * மார்க்ஸும், ஏங்கல்ஸும்
சோஷலிஸத்தை ஒரு கற்பனை என்ற நிலையிலிருந்து ஒரு விஞ்ஞானமாக மாற்றினர்
மனித சமூக அபிவிருத்தியின் பொதுவான விதியையும் மனித சமூக அபிவிருத்தியின்
பொதுவான விதிகளையும், முதலாளித்துவ சமூகத்தின் வளர்ச்சியின் இயக்க (விசேஷ)
விதிகளையும் கண்டுபிடித்ததின் மூலம் அவர்கள் இதைச் செய்தனர். இந்த விதி
களின் அடிப்படையிலும், தர்க்கரீதியாகவும், முதலாளித்துவ சமூக அமைப்பு தவிர்க்க
முடியாமல் தாக்கி எறியப்படும் என்பதையும், தொழிலாளி வர்க்கம் வெற்றிகரமாக ஆட்சி
அதிகாரத்தை கைப்பற்றும் என்றும் உலகறிய எடுத்துக்காட்டியதின் மூலம்,
விஞ்ஞான சோஷலிஸத்தின் கர்த்தாக்கள் சோஷலிஸத்தை அடைவதற்காக தொழிலாளி
வர்க்கத்தின் வெற்றிகர புரட்சி இயக்கம் ஏற்படுவதற்கு அஸ்திவாரமிட்டனர் * முதலாளி
த்துவம் ஏகபோக முதலாளித்துவமாக மாறும் போது தோன்றும் அதனுடைய முரண்பாடுகளைப்
பற்றித் தெளிவாகப் பரிசீலனை செய்து ஏகாதிபத்தியம் என்பது எவ்வாறு தொழிலாளி வர்க்கத்
தின் சோஷலிஸப் புரட்சி தோன்றும் காலம் என்பதை எடுத்துக்காட்டினர் * ஏகாதிபத்யக் கட்ட
த்தில் முதலாளித்துவத்தின் சமமற்ற வளர்ச்சி விதியின் அடிப்படையில் லெனின் — இவ்விதி
யை லெனின் தான் கண்டுபிடித்து விளக்கினார். ஏற்கனவே பலமுறை போட்டிக்கொள்வதற்
காக ஏகாதிபத்திய நாடுகளிடையே கூர்மையான சண்டைகளும், யுத்தங்களும்
தவிர்க்க முடியாமல் ஏற்படும் என்பதையும் எடுத்துக்காட்டினார். ~~அதன்விளைவாக~~, மேலும்
தனி ஒரு நாட்டில் சோஷலிஸத்தை வெற்றிகரமாக நிர்மாணிக்க முடியுமென்பதையும் எடுத்துக்
காட்டினார். அதன்விளைவாக, ஒவ்வொரு நாட்டிலுமுள்ள தொழிலாளி வர்க்கத்திற்கும் ஒரு புரட்சி
கரமான திட்டத்தைக் கொடுத்தார். அதனுடைய புரட்சிகரமான வெற்றியைக் கட்டிவளர்த்து வைத்
டார் * லெனினுடைய தத்துவங்களால் வழி காட்டப்பட்டு லெனின்-ஸ்டாலின் கட்சியாகிய
போல்ஷெவிக் கட்சி இந்த கனவை யதார்த்தமாக்கி, உலகத்திலேயே முதல் சோஷலிஸ்ட்
அரசை நிர்மாணித்தது. * *. உலக சம்பவங்களைப்பற்றி ஸ்டாலினுடைய மிக்க பரிசீலனை:- மார்க்ஸ்,
லெனின் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டும், ஒவ்வொரு கட்டத்திலும் அவைகளை
செழுமைப்படுத்திக் கொண்டும், அபிவிருத்தி செய்துக் கொண்டும், சோவியத் யூனிய
னில் சோஷலிஸத்தின் சிற்பியும், ஸ்தாபக கர்த்தாவுமாகிய ஸ்டாலின் தன்னுடைய புதிய
நூலில், புதிய உலக நிலைமையைப்பற்றி ஆழமான ஞானத்துடன் பரிசீலனை செய்கிறார் * உல
கம் முழுவதும் வியாபித்த தனி ஒரு உலக மார்க்கெட் சிதைந்து, சமதூரத்தின் சேர்ந்தும் ஒன்று
க்கொன்று எதிரான இரண்டு உலக மார்க்கெட்கள் அமுலுக்கு வந்துள்ளதன் பிரமாதமான முக்
கியத்துவத்தை எடுத்துக் காட்டுகிறார். * சோஷலிஸ்ட் சமூகத்திலும், இன்றைய முதலாளித்
துவ சமூகத்திலும் இயங்கும் அடிப்படையான பொருளாதார விதிகளைக் கண்டுபிடித்து
அதை ஸ்டாலின் விளக்கியுள்ளார். இரண்டு உலகங்களுக்குமிடையே வளர்ந்துவரும் வேறு
பாடுகளை விளக்கும் விதிகளையும், முதலாளித்துவ அமைப்பைவிட சோஷலிஸ்ட் அமைப்பு பலப்
பல மடங்கு உயர்ந்தது என்பதின் காரணங்களை விளக்கும் விதிகளையும் ஸ்டாலின் பரிசீ
லனை செய்துள்ளார் * இதன் மூலம் ஸ்டாலின், எல்லா நாடுகளின் தொழிலாளி வர்க்கமும் ஏகாதி
பத்யத்தை எதிர்த்து அது வெற்றிக் கொண்ட நாடுகளிலும் சரி, தொ. வ. இன்னும் போராடிக்
கொண்டிருக்கும் நாடுகளிலும் சரி, க. க. வை ஏற்படுத்துவதற்கும், இன்னும் ஏகாதிபத்யம்
ஆதிக்கம் வகிக்குமிடங்களில் அதைத் தாக்கி வெல்வதற்கும் தான் என்ன கடமைகளை
நிறைவேற்ற வேண்டும் என்பதைத் தெளிவாக உணர்ந்து கொள்வதற்கும் ஸ்டாலின் எல்லா நாடு
களின் தொ. வ. வை திறமையுள்ளதாக்குகிறார் * *